உ

சிவமயம்.

# சிவபுண்ணியத்தெளிவு.

சென்னபட்டணத்திலிருக்குந்தொண்டமண்டலவேளா
ளர்களில்உயர்துளுவவேளாளராகிய
மண்ணிப்பாக்கம்

## வேதகிரிமுதலியார்

சைவர்களிற்கற்றோரேயன்றிமற்றோருஞ்சிவபுண்ணியத்
தின்பெருமையுணர்ந்துய்வதேபயனாகக்கருதிப்
பிழைதிருத்தியச்சிற்பதிப்பிக்கவென்று
சொல்லச்சிலபிரதிகளைக்கொண்
டொருவாற்றாற்பிழைதிருத்திக்
காஞ்சிபுரம்

## சபாபதிமுதலியாரால்

சென்னைக்கல்விச்சங்கத்துத்தமிழ்ப்புலவராகிய

## திரு-வேங்கடாசலமுதலியாரது

சரஸ்வதிஅச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டது.

சாலிவாகனசகவருடம் - ௲௭௱௭௰௮ - நிகழாநின்ற
துர்முகி வருஷம் ஐப்பசிமீ

இதன்விலை - அணா - ௪.





திருச்சிற்றம்பலம்.

# சிவபுண்ணியத்தெளிவு.

(காப்பு.)

பழகியபதித்துவப்பான்மையெய்தவு - - ✻
முழுகியபசுத்துவமுற்றுநீங்கவு - - - - ✻
மொழுகியமும்மதத்தொளிகொண்ஞானமா - ✻
ரழகியபிள்ளையாரடிகள்போற்றுவாம் - - ✻

(சபாநாதர்துதி.)

உலகினுமுயிரினுமொன்றிநின்றருள் - - ✻
குலவியவொளியுயிர்குறிக்கவைந்தொழி - ✻
லிலகியமன்றினுளெழினடஞ்செய்வோன் - ✻
வலமிகுமலரடிவழுத்துவாமரோ - - - (க)

(சிவகாமித்தாயார்துதி.)

ஒற்கமிலிருண்மலத்தொளியினீங்கியே - - ✻
நற்கதிபெறவருணயந்துபோற்றுவாஞ் - - ✻
சிற்கனன்றன்னொடுசிறப்பினோங்கியே - - ✻
கற்கொளிபோன்றுளாள்கமலபாதமே - (உ)

(விநாயகர்துதி.)

விடமணிகளனெனவிளங்கித்தோன்றவே - ✻
தடமலர்நீர்கொடுதாழ்ந்துபோற்றுவாம் - ✻
வடவரைப்பாரதமருப்பிற்றீட்டுமா - - ✻
கடகரிமுகத்தவன்கமலபாதமே - - (ங)

(சுப்பிரமணியர்துதி.)

அந்தமாதியுமிலாவாணவத்தொடும் - - ✻
பந்தமானவைகெடப்பணிந்துபோற்றுவாஞ் - ✻
சந்தமார்தடவரைத்தமிழ்க்கடற்கருள் - - ✻
கந்தவேள்பூங்கழற்கமலபாதமே - - (ச)

(நந்திதேவர்துதி.)

ஓதுமுப்பொருளையுமுணர்த்துநாற்பதத் - ✻
தாதியாகமந்தநீஇயதனைப்பன்னிரு - - ✻
போதசூத்திரந்தாப்புகன்றநந்திதன் - - ✻
பாதபங்கயமலர்பணிந்துபோற்றுவாம் - (ரு)

( அகத்தியமுநிவர் துதி. )

சகத்துயிரிருண்மலத்தறவினீங்கியே - - - *
யகத்தினுளவைவெலாமடக்குவாய்மையா - - *
மகத்துவமெமக்கருண்மலயத்தோங்குசீ - - - *
ரகத்தியன்றிருவடிக்கன்புசெய்குவாம் - - (௬)

( காரைக்காலம்மைதுதி. )

கொம்மைசேர்வரிமுலைக்கூறனார்தமைச் - - *
செம்மைசேர்கயிலையிற்சென்றுபோற்றியே - - *
யிம்மையேசிவகதியெய்துகாரைக்கா - - - - *
லம்மைதாண்மலர்முடிக்கணிகுவாமரோ - - (எ)

( திருஞானசம்பந்தசுவாமிகள் துதி. )

பிறையணிமௌலியன்பேதையாளொடுஞ் - - *
சிறையணிபுனற்றடத்தீரமேவியே - - - - *
நிறையமுதருந்தவுண்ணெகிழப்பாடுநான் - - *
மறையவன்மலர்ப்பதம்வணங்கிவாழ்த்துவாம் - (அ)

( அப்பர்சுவாமிகள் துதி. )

திரைபொருகடலிடைச்செறித்துத்தீயமண் - - *
புரையினர்விடுசிலைபுணையதாகவே - - - - *
யுரைதருமைந்தெழுத்துணர்த்துபாடலாற் - - *
கரைவருமப்பர்தாள்கருதுவாமரோ - - - (௯)

( சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி. )

அந்தரமிழிந்தவெள்ளானைமீதுறீஇ - - - *
மந்திரவெள்ளிமாமலையினேகியே - - - - *
சந்திரசேகரன்சரணஞ்சேர்தமிழ்ச் - - - - *
சுந்தரனடிமுடிசூட்டுவாமரோ - - - - (௰)

( மாணிக்கவாசகசுவாமிகள் துதி. )

பேதவூர்தநுகரணதிபின்னிட - - - - *
நாதவூரகன்றுமெய்ஞ்ஞானநாட்டத்தாற் - - *
போதவூர்புகுந்துதம்போகமேற்கொளும் - - *
வாதவூரடிகளைவணக்கஞ்செய்குவாம் - - (௰௧)

( திருத்தொண்டர் துதி. )

நீக்கியாரிருண்மலநிறைந்தபேரொளி - - - *
யாக்கியேமரோலயத்தகன்றநோக்கின - - *
ரேக்கியேபெருயர்நோன்மைபெற்றசீர்ப் - - *
பாக்கியத்தொண்டர்தாள்பணிகுவாமரோ - (௰௨)

(மெய்கண்டசிவாசாரியர் துதி.)

நற்றமிழாற்சிவஞானபோதநூற் - - - - *
சொற்றுயிர்க்கியல்பதாஞ்சுகோதயந்தரக் - - *
கற்றவன்வெண்ணெய்மெய்கண்டதேசிகன் - - *
கொற்றமார்குனாகழல்குழைந்துபோற்றுவாம் - (௰௩)

(அருணந்திசிவாசாரியர் துதி.)

புன்னெறியகற்றியபோதசூத்திரத் - - - - *
தின்னெறிவிளங்கநூலிலங்கச்செய்துமே - - *
னன்னெறிகாட்டருணந்திதேசிகன் - - - - *
றன்னிருபங்கயசரணம்போற்றுவாம் - - (௰௪)

(உமாபதிசிவாசாரியர் துதி.)

சொற்றருமுதல்வழித்தொன்மைநூன்மறை - - *
கற்றொளிர்சிவப்பிரகாசநூல்புகல் - - - - *
கொற்றவன்குடிவருகுரவனெம்மையா - - - *
ணற்றவன்பதமகநாட்டுவாமரோ - - - (௰௫)

(குகைமறைஞானதேசிகர் துதி.)

மாசிலாகமமெலாம்வரம்புகண்டுயிர்ப் - - - *
பாசவேரறத்தமிழ்ப்பனுவல்செய்தவன் - - - *
நேசமார்குகைமறைஞானதேசிகன் - - - - *
வாசமார்மலர்ப்பதம்வணங்குவாமரோ - - (௰௬)

(சத்தியஞானதேசிகர் துதி.)

சித்திசேர்வெண்ணெய்மெய்கண்டதேசிகன் - - *
பத்திசேர்மரபினைப்பரித்தபண்டிதன் - - - *
முத்திசேர்சிவபுரமுதல்வனெம்மையாள் - - - *
சத்தியஞானிதன்சரணம்போற்றுவாம் - - (௰௭)

[அவையடக்கம்.]

புன்சொலாநரகினைப்புகுத்திற்கேட்பவர்க் - - *
கின்சொலாயினுமஃதிழுக்கற்பாலதா - - - *
நன்சொலாஞ்சிவகதிநல்குமேயெனிற் - - - *
புன்சொலாயினுமிகப்போற்றுந்தன்மைத்தால் - (௰௮)

கண்ணுதற்புகழினைக்கருதிடாவெனிற் - - - *
பண்ணவர்மொழிகளும்பழியின்பாலவா - - - *
மண்ணறன்புகழ்புகலடியனேன்மொழி - - - *
நண்ணியவர்யினும்புகழிற்சாருமால் - - (௰௯)

[நூற்சிறப்பு.]

வேறு.

அழுக்கிலாவநாதிமுத்தனகண்டிததுரியாதீத - - - *
னிழுக்கில்வேதாகமங்களியம்பினன்பொதுச்சிறப்பென் - *
றொழுக்கமாருலகத்தோர்க்குமோங்குசத்திநிபாதத்தின் - *
வழுக்கிலாதவர்க்குமென்றேமதித்தனர்நூல்வல்லோரே (உ௰)

சீவனைச்சிவத்திநுென்றுச்சேர்க்குஞ்சித்தாந்தத்தோர்க் குஞ்
சீவனைப்பரத்திநுென்றுச்சேர்க்கும்வேதாந்தத்தோர்க்கும் *
பாவதையிரண்டுமொன்றேபரமஞானத்தோர்க்கெல்லா - *
மேவியகருமகாண்டம்விளம்பிடிற்பேதமாமே - (உக)

சுருதியின்மிருதிமுற்றுஞ்சொற்றிடும்புராணமெல்லாங் - *
கருதுபுண்ணியங்கடத்தங்கதிபசுத்துவமேகாட்டும் - *
பொருதிமிரகற்றிச்சைவம்புகல்சிவபுண்ணியந்தான் - *
வருதியென்றருளாற்சாலோகாதியைவழங்குமன்றே - (உஉ)

ஆரணம்புகன்றவாற்றுலக்கிநிட்டோமமாதி - - - *
சீரணிவிரதநற்சாந்திராயணஞ்செய்கின்றோர்கள் - - *
பூரணவிமானத்தேறிப்பூமியந்தரசுவர்க்கத் - - - *
தேரணிபுநிதராகியின்பொடும்போகந்துய்ப்பார் - (உங)

ஓசைகொளசுவமேதமொருநூறியாகஞ்செய்தோர் - *
வாசவன்பதத்திற்சேர்வார்மற்றிவரநந்தகோடி - - *
நேசமார்மகத்திநுஞ்நிறைசிவன்றொண்டர்தாமே - - *
பேசுசாட்டியத்தாற்சேரும்பெரும்பதமடையார்மன்னே (உச)

களித்திடுமிவைசரீரகன்மமென்றறைந்தவாற்றுல் - - *
விளித்துயிரினைப்பிறப்பில்வீழ்த்திடுமதனுலாவி - - *
குளித்திடுமலத்தைநீக்கிக்கழல்காட்டுமீசன் - - *
றெளித்திடுசிவாகமத்திற்செப்புபுண்ணியங்கடாமே - (உரு)

ஆதியில்நாதிசச்சிதாநந்தவமலன்றனே - - - - *
யோதியவிமலஞானமுணர்வுயிர்க்குருமைநோக்கிச் - *
சோதிசேர்கருணைமேனிதொடக்கிப்பின்னருளாற்கூறு - *
நீதிசேர்காமிகாதிநிறைமொழியிருபத்தெட்டாம் - (உசா)

இங்கிவற்றின்பேதங்களிருநூற்றேழாமவற்றுட் - - - - *
டுங்கமார்நந்திக்கெந்தைசொற்றவாகமங்கடம்மிற் - - - *
றுங்குசித்தியவிசுவசாதாக்கியந்தன்னின்மன்னும் - - - *
பொங்குபுண்ணியத்தையானுந்தமிழினூற்புகலலுற்றேன் - (உஎ)

(நூற்பெயர்)

உலகினுக்கிதமதாயுமுயிர்க்குறுஞ்சித்தியாயும் - - - - *
பலமுறக்கொடுப்பதாயும்பகருமுத்தமமதாயுங் - - - *
குலவுபுண்ணியத்தையீசன்கூறிடநந்திகேட்டே - - - *
புலமுறவிசைற்குநாமம்புண்ணியத்தெளிவென்றானல் - (உஅ)

(கோபுரசிகரந்தரிசிக்கும்பலன்)

பிறையணிசிகரந்தூரப்பிறங்கிடத்தரிசித்தேபி - - - *
னறைகழற்கமலபாதத்தடிகளாலயத்துளேகி - - - - *
முறையுறப்பணிந்தார்முன்னமுற்றியவுடலந்தோறுஞ் - - *
சிறையுறப்புரிந்தபாவந்தீர்தலக்கணத்திற்றிண்ணம். - - (உகூ)

(வழிநடந்துவந்தவிளைப்போடும்வலம்வரும்பலன்.)

வழியினிலதிதூரத்தில்வந்திடுமிளைப்பினோடும் - - - *
விழிநுதல்மலன்கோயின்மேவியேவலஞ்செய்வோர்தா - - *
மொழியதர்க்கிலேசத்தோடுமுயன்றமுற்பாவமெல்லா - - *
மழிவுறப்புரிவனெங்கோனருந்தவமிதன்மேலுண்டோ - (௩௰)

{ஆசாரியரிருக்குமடாலயத்தையும் அவர்
திருமேனியையும்வலம்வரும் - பலன்.}

இன்னவைகுரவனோங்குமெழில்கொளாலயத்திற்செய்தோர் - *
சொன்னமுற்பலத்திரட்டிதுன்னுவர்சோதிஞான - - - - *
மன்னியகுரவன்மேனிமகிழ்வுறத்தொழுதுநின்றோர் - - *
பின்னும்வேணியனைக்கண்டபேற்றிருகுணிதஞ்சேர்வார் - (௩௧)

(ஆசாரியனைப்பணிந்துதுதிக்கும்பலன்.) வேறு.

பதியைப்பணியும்பலத்திரட்டிபரமகுரவற்பணிவோர்க்கு - *
வதியுமுயிர்க்குளுயிராகிவளருஞானவரோதயன்பாற் - - - *
றுதியிற்சதமாந்தேசிகனைத்துதிப்போர்தமக்குத்தொகும்பலனென்
றதிகமறைகளறைதலினலவன்றன்பெருமையளப்பரிதே. (௩௨)

(ஆசாரியருக்குப்பணிவிடைசெய்யும்பலன்.)

பாசமகற்றுந்தேசிகற்குப்பரிவாலென்றும்பணியதனை - - *
நேசமுறவேபுரிந்தோர்க்குநிகழும்பரமசிவயோக - - - *
மாசைபெருக்கும்போகவிதமடையக்கருதினவர்குரவன் - *
வாசமலர்ச்சேவடியிணைகண்மகிழ்ந்துபாங்காலவணங்குகவே.(௩௩

{திருவிழாவில்வலம்வருதலுக்கும்
ஆசாரியர்பின்வருதலுக்கும்பலன்.}

அட்டமூர்த்தியமலேசனணியார்விழவில்வலம்வருவோர்க் - *
கிட்டுமுறவோரடிக்கடிக்கங்கியற்றும்பரிமேதப்பலனுஞ் - *
சிட்டர்பரவுந்தேசிகன்பின்செல்கின்றோர்க்கும்பலஃதே - *
கட்டமலமும்வினையுடலுங்கழித்துச்சிவத்திற்களிப்பாரே (௩௪)

(துசாரோகணஞ்செய்யுங்காலத்தில்அதன்பின்வலம்வரும் பலன்.)

பந்தமானபசுபாசப்பகைவனிடபக்கொடியேற்று *
மந்தவேலைதனிற்சென்றெயழகார்கொடிப்பின்வலம்வருவோர் *
புந்திகளிகூர்தமநியமும்பொன்னுமகவும்பௌத்திரருஞ் - *
சிந்தைகளிப்பக்காசினியிற்செல்வம்பெருகத்திளைப்பரே. (௩௫)

(துசாரோகண நிவேதநத்தின்பலன்.)

வடமேருவினைச்சிலைவளைத்தவரதனிடபக்கொடியேற்றிற் - *
படமாரிடபநிவேதநத்தைப்பரிவாலருந்துமைந்தொடிதான் - *
றிடமேம்மலடியென்றிடினுஞ்சிறந்தமகவைப்பெற்றிடுவள் - *
விடமார்கண்டத்தமலேசன்விரம்புநூலின்விதியிதுவே. (௩௬)

(திருவிழாவில்நாடோறும்வலம்வரும்பலன்.)

ஏற்றுக்கொடியோனாலயத்தில்யாதோர்காலம்வலம்புரிவோர் - *
மாற்றற்குரியாரொருபிறப்பின்வதிந்தபாவமத்திநத்திற் - - *
போற்றிநாளும்விழவின்வலம்புரிவோர்மேலாமுருத்திரராய்த் *
தோற்றித்திகழ்வருண்மையென்சொல்லுஞ்சுருதிசிவாகமமே (௩௭

(ஏகாங்கநமஸ்காரமுதலாகியஅஷ்டாங்கநமஸ்காரம்.)

சிரமேகாங்கம்வலக்கரத்தைச்சிரத்திற்குவித்தறுவிதாங்கஞ் - *
சிரமேல்வாமகரத்திணையுஞ்சேர்த்தற்றிரிவிதாங்கமதாஞ் - - *
சிரநீள்கரஞ்சானுக்கணில்நீண்டிற்பஞ்சாங்கமதாகுஞ் - - *
சிரமோவாய்கார்துகைசானுசெகத்திற்படிதலட்டாங்கம். (௩௮)

(நமஸ்காரபலன்.)

அறைந்தவங்கமைந்துவிதத்தாலுமநாதியவற்றினின்றே - - *
துறந்தஞானவானந்தசேர்திபாதந்தொழுதெழுவோர் - - *
சிறந்தவுலகின்மேலோர்மெய்ச்சிறப்புற்றிறைஞ்சத்திகழ்ந்துவரே *
நிறைந்தசாலோகாதிபலனெறியானுகர்ந்துநிலவுவரே. - (௩௯)

(சிவாலயத்தைத்திரமூன்றுவலஞ்செய்யும்பலன்.)

பாசப்பகைவன்பசுபதியெம்பிரமனுறையுமாலயத்தி - - - *
னேசத்துடனேசென்றிறைஞ்சிநித்தமூன்றுவலம்புரிந்து - *
பேசற்கரியோன்றிருமுன்னர்ப்பிறங்கவிருந்தபெருந்தவத்தோ - *
ராசத்திற்குசாமீபமடைவரிதுசத்தியமாமால். - - - (௪௰)

(சிவயோகிதங்குமிடத்தின்பலன்.)

பரவுமிரவோர்பகல்பகன்முற்பாகமொருநாளிருநாளா - - ※
தரவுபெருகுஞ்சிவயோகிதங்குந்தலம்யாதத்தலமே - - - ※
கரவிறவமுந்தருமமுமங்கலங்களெவையுமாகமமும் - - - ※
விரவுமுயிர்க்காம்புநிதமுமம்மேலோன்பெருமைவிளம்பரிதே. ※ (௪௧)

(இதுவுமது.)

சித்தமலமும்வினையுடலுந்தீதென்றருளாலநாதிமல - - - ※
முத்தனடிக்கீழத்துவிதமுத்தியடைந்தசிவயோகி - - - - ※
புத்தியுடன்யாதோரிடத்திற்பொருந்திலனைநாழிகையவணே - ※
பத்திபடச்செய்பாவமெலாம்பரிந்துகெடுதனிச்சயமே. - (௪௨)

(தீர்த்தத்தின்பலன்.)

அத்தனிறைவனமலேசனமராலயத்தினருகுறுநீர் - - - ※
சுத்தமாத்தமாயினுநற்சுரர்கள்பரவுகங்கையென்றே - - ※
புத்திபுரிந்தங்கத்தடத்தின்புனலுட்படிவோரியாரேனுஞ் - - ※
சத்தசநநத்துறுபாவந்தணந்துசிறந்துதயங்குவரே. - (௪௩)

(ஆசாரியர்திருவடித்தீர்த்தத்தின்பலன்.)

சித்துமசித்துஞ்சித்தசித்துந்தெளிந்தயோகவசம்பிரம - - ※
முத்தியளிக்குந்தேசிகன்றன்முளரிச்சரணக்கிரத்துதித்த - ※
சுத்ததோயந்தனைவாங்கித்தொழுதுசிரமேற்றெளித்தோர்தம் ※
புத்தியுறுபாவாதிவினைபோமக்கணத்திற்றிண்ணமதால். - (௪௪)

(ஆசாரியர்கொடுக்கும்பரிகலத்தின்பலன்.)

பாசமகற்றுந்தேசிகன்றன்பரிவானுகர்ந்துமிகுசேடம் - - ※
வீசவன்றனேனசமுடன்விதியினருந்துமேலோர்க - - - ※
ளோசைவடிவாஞ்சண்டேசனெனப்புற்றுறைவரீதல்லாற் - ※
பேசவரியபாதகமும்பிரிப்பரிவைசத்தியமாமால். - - (௪௫)

(ஆசாரியர்திருவடிகளைப்பரிசிக்கும்பலன்.)

மாநமொழுக்கந்தவந்தாநம்வனப்போர்நான்குவருணத்து - ※
ஈநமின்றியிரண்டாமாச்சிரமத்திருத்தலிசைந்துசிவ - - ※
ஞாநமதின்பொருளுணர்த்துநற்றேசிகன்றாள்பரிசித்தோ - ※
ருநமானபாவமெலாமொழிவாரொன்றூன்மொழிவாரே. - (௪௬)

(சிவலிங்கதரிசநபலன்.)

தங்கங்கநகமேருவனைதாநங்கொடுத்தல்சத்கோடி - - - ※
மங்குலளகக்கந்நியனைவளத்தினளித்தலொருகோடி - - ※
கருகோடுடைத்தீம்பாற்சுரபிவழங்கறுலங்குசிவ - - ※
லிங்கனையேதரிசித்தோர்க்கெய்துபலத்துக்கிணையாமால் (௪௭)

(சிவலிங்கத்தைப்பரிசிக்கும்பலன்)

ஈசர்கன்பாயவனிலங்குமிலிங்கமதனைப்பரிசித்தோர் - - *
மாசிந்திடுவர்பாவமெலாமூலமலமுமுடித்தருளாற் - - *
பேசற்கரியவாநந்தம்பெறுவாரிறவாப்பிரான்கழற்கீ [போல்.]
ழாசைக்குளிகையுறக்களிம்பற்றுலோகம்பொன்னூமுறைமை]

(அருச்சனையின்பலன்.) (சஅ)

நிலத்திற்றிகழ்ந்தநறுமலருநீருற்பவித்தபோதெவையும் - - *
புலத்தினழுந்தாவன்பினொடும்போதாநந்தன்கழற்கணிந்தோர் - *
மலத்தினநாதிமுத்தன்மலைவயிரியுறையுஞ்சிவலோக - - *
தலத்திற்புகுந்துநலத்தகையதலைவராகிநிலவுவரால் - - (சகூ)

(இந்தப்புட்பம்அருச்சனைக்காகுமெனநினைக்கும்பலன்.)

இறைவனமலன்றனக்கென்றேயாதோர் தலமுற்றிலகுமிகு - *
நறைகொண்மலராயகமலரநயந்துமதிக்கிலெவரோனு - - *
முறையினவர்க்கம்மதிப்பதனான்மூலமலமற்றேகமதா - - *
மறையின்முடிவின்வீட்டின்பம்வழங்கும்வழியின்பொருட்டாமால்

(நந்தநவநம்வைக்கும்பலன்.) (ருய)

தேவதேவன்றனக்கன்பாற்சிறப்புமிகுந்தநறுமலர்ப்பூங் - *
காவைமகிழச்சமைத்தளிக்குங்கருணையுடையோரியாவரவர் - *
பூவின்மடந்தைகநகமிகப்பொருந்தியுலகினந்நியத்திற் - - *
பாவினிலங்குமுருத்திரர்தம்பதம்பெற்றிருப்பர்பண்ணியகன்றே(ருக

(பசுவிற்குப்புற்கொடுக்கும்பலன்.)

இரவியெழுமுற்காலத்தினெழுந்தோர்பிடிபுற்பறித்தன்பாற் - *
பரவியரியசுரபிகட்குப்பரிந்துகொடுத்தபெருந்தவத்தோர் - *
விரவும்வறுமையாவைகளும்விரவாதொழிந்தேவெண்மதியு - *
மரவும்அணியுமணிமுடியோனமருஞ்சிவலோகத்தடைவார் - (ருஉ)

(சிவயோகிக்குப்பிச்சையிடும்பலன்.) வேறு.

விச்சைநான்மறைவேதியர்கோடிபேர்க் - *
கிச்சையோடநமீபலம்யாவையு - - - *
நிச்சயம்மொருநீள்சிவயோகிகைப் - - *
பிச்சையிட்டபெரும்பயனல்குமால் - (ருங)

(பசுவின்பாலபிஷேகபலன்.)

கோவின்பேர்பெறுதீர்த்தங்குறுகியே - *
யாவினம்பதினாயிரம்பன்மறை - - - *
மேவும்வேதியர்க்கீபலம்வீசுமா - - - *
லாவின்பாலிறைக்காட்டிடுமன்பர்பால் - (ருச) (ச

(பஞ்சகௌவியஅபிஷேகபலன்)

கொன்றைவேணிக்குழகனுக்கன்பினால் - - *
வென்றியாவினைந்தாட்டும்வியப்பினோர் - *
பொன்றயங்குவிமானம்பொருந்திவா - - *
னென்றிவாழ்வருருத்திரலோகமே, - - (ருரு)

(இதுவுமது)

துய்யகாபிலகௌவியஞ்சோதிசேர் - - *
செய்யலிங்கந்திகழ்பாணிவட்டமட் - - *
டுய்யுமாறுள்ளமாத்திரமாட்டினோர் - - *
குய்யருத்திரலோகங்குறுகுவார் - - (ருசா)

(ஸ்தபநபலன்)

விதியினுலிறைக்காட்டல்விரும்பிநீர் - - *
வதியுநற்றபநம்பலவைத்துளோர் - - - *
புதியபோகங்கள்யாவும்பொருந்தியே - - *
யதிகருத்திரலோகமடைவரால் - - - (ருஎ)

(திருமஞ்சநபலன்)

கந்தமாமலர்நாற்றங்கமழுநீஇச் - - - *
சிந்தும்வெண்டிரையாற்றினுட்சீதநீர் - - *
பந்தநீக்கும்பசுபதிக்காட்டினோர் - - - *
வந்துருத்திரலோகம்வழங்குவார் - - (ருஅ)

(சிவார்ப்பிதபலன்)

வருந்தியாற்றியவான்றருபோகங்க - - - *
ளருந்துமுன்னரமலற்கறிவொடும் - - - *
பொருந்தநல்கிலப்போகங்கள்யாவையுந் - *
திருந்திநானுஞ்சிறப்புறமல்குமால் - (ருகூ)

(பூசிக்கத்தக்கமூர்த்தங்கள்) வேறு.

மாநதமண்டலங்கணிகம்பலகைபடம்பித்தி - *
வனைந்திடுசித்திரமிரதம்வேரமேணவருத்த - *
தாநமிவையோரொட்டுமொன்றுக்கொன்றதிகந் *
தண்படிகம்வாணலிங்கஞ்சாற்றுமிவற்றதிக - *
ஞானமயலிங்கத்திலரனைப்பூசிப்போர் - - *
நற்றீர்த்தந்தாநமகமரும்பலங்களெவையு - *
மீநமுறுபலபாவமெரித்திடும்புண்ணியமு - *
மெய்திடுவரிவர்க்கொழிவாம்பாவவிதமொழிவாம்(கூ0)

# சிவபுண்ணியத்தெளிவு.

(சிவபூசையின்பலன்)

செந்தழல்வேதியரைக்கொன்றோர்தேசிகனைப்பிழைத்தோர்
தேநுவினையறுத்தோர்கள்செய்நன்றிசெகுத்தோர் *
தந்தைதாய்தனைப்புதல்வன்றனைத்தமையன்றனையுந் - *
தருவினின்றுயிரொழித்தோர்தமநியமுங்கவர்ந்தோ
ரந்தமின்மித்திரரறவோராண்மையினிற்சிறந்தோ - *
ராக்கைதடிந்தோர்குரவன்மனையயலார்மனையும் - *
யந்தமுறவணைந்தோர்மாபாதகத்தோரேனும் - *
பரமனைவந்திக்கிலந்தப்பாவமெலாமறுமே - (சுக)

(ஆலயத்திற்சிவலிங்கப்பெருமானைத்தரிசிக்கும்பலன்.)

அற்பமகத்துவம்வறியோரதிகதநமுடையோ - *
ரளித்தவர்க்குப்பலஞ்சமமாமாதலினல்விதாந - *
கற்புடையவிதியினராயொருபொழுதாலயத்திற் - *
கண்ணுதறன்றிருமுன்னர்க்களிப்புடனேத்தினர்தாம்
பொற்புடையபலபோகஞ்செல்வங்களெவையும் - *
பொருந்தியிகலோகத்திற்போதகமுற்றிருந்தே - *
யற்புதமெய்யந்தியத்திலடைவர்முத்தியெனவே - *
யநாதிமுத்தன்மலவயிரியறைந்தனனாகமத்தே (சுஉ)

{ எதி - பிரமசாரி - கிரகஸ்தன் - வாநப்பிரஸ்தன் - இவர்களுக்குக்கொடுக்குந்தாந பலன். }

எதிபிரமசாரிகிரகியெழில்வனத்திலுறைவோ - - *
னென்னுமிவர்ஞாநயோகக்கிரியாதியாநத் - *
ததிகதவமுடையரிவராதலினன்னவர்பா - - - *
லருளினவரவர்க்கேற்றதாநமளித்திடில்வான் - *
கதிருதயம்வரவுலகிலிருளகலுமாபோற் - - - *
கழிந்தகலும்வறுமையெலாமொழிந்திடலன்னவர்க்கே
புதியதநதாநியம்புத்திரபௌத்திராதி - - - *
புங்கமுறுபோகமெல்லாந்தங்கியுறுந்தானே (சுங)

{ சங்கு - வாத்தியம் - சாமரை - வாள் - கண்ணாடி - குடை வஸ்திரம் - பொன் - தாம்பிரபாத்திரம் இவற்றின்பலன். }

தழங்குசங்குபல்லியஞ்சாமரைவாள்கண்ணாடி - *
சத்திரம்வத்திரங்கநகந்தாம்பிரபாத்திரமு - *
முழங்குநதிமதியிதழிமுடிக்கணிந்தபெருமான் - *
முன்னுறப்பணிந்தெழுந்துமொழிந்திடுநான்முறையே
வழங்குவோர்தமைமுன்னாள்வருத்திடுநல்குரவு - *
மாற்றியகமகிழ்வுறப்பின்மல்குவரைநகர்வர் - *

பழங்கணிருளொளியகன்றவுயிர்க்குயிராய்நிறைந்த *
பரமசிவனுருத்திரன்றன்பதிபெறலுண்மையதால் (௬௪)

(சிவபெருமானுக்காகமணிகொடுப்போரடையும்பலன்) வேறு

ஆறுவேணியமலற்குமண்டபத் - *
தேறுமாமணிதூபத்தெறிமணி - *
கூறியீந்தவர்கூறருஞ்செல்வமும் - *
வீறுதேசமுங்கீர்த்தியுமேவுவார் (௬௫)

{ சிவபெருமானுக்கு - ஆதநம்-சயநம் - வாகநம் - சிவிகை - கொடுப்போரடையும் பலன். }

ஆதநஞ்சயநம்மணியாநமு - *
மேதமில்சிவிகைமுதலின்புற - *
நாதனுக்குக்கொடுத்தநலத்தினு - *
லோதலுற்றசாமீபமுறுவரால் (௬௬)

{ நாடகசாலை - திருமதில் - கோபுரம் - மண்டபம் - சிவபெருமானுக்காகக்கட்டுவிப்போரடையும் பலன். }

திருவரங்குதிருமதில்கோபுர - *
மருவுமண்டபம்வானவற்கன்பொடு *
கருவரம்பறக்கண்டவர்கண்ணுத - *
லுருவநன்குறமேவுவருண்மையே (௬௭)

{ சிவபெருமானுக்குத்திருவாபரணம் தீபதூபங்கள்கொடுக்கும் பலன். }

கலன்களாதியுங்கற்கரடாதியும் *
பொலன்கொடிபகந்தாதியும்புங்கவற் *
கிலங்கவேயளித்தோர்நிலனின்மிசை *
நலங்கடுய்த்துநற்றேவினைநண்ணுவார் (௬௮)

(சிவபெருமானுக்குப்பூமிகொடுப்போரடையும்பலன்)

வளங்கொளோர்பசுவின்னதண்மாத்திரம்
விளங்குபூமிவிடமலற்குநல்கினோ - *
ருளங்கொடீவினையாவுமொரீயவர் - *
தளங்கொடாநபலங்களுந்தாங்குவார் (௬௯)

( விளைநிலமும் சோலையும் சிவபெருமானுக்குக்கொடுக்கும்பலன்)

நீரினோங்கிநிறைவிளைபூமியின் - *
காரினோங்குகவின்பொழினாநமார் *
சீரினோங்குசிவன்றனக்கீந்திடிற் - *
பாரினோங்குபல்போகமும்பல்குமால் (௭௰)

(சிவவேள்விசெய்யும்பலன்)

தேற்றுநான்முறையேசிவாகம - *
தாற்றினோர்களமலனுக்கன்பினாற் - *
கூற்றின்மூவேழ்குலர்குழித்தீயினின் *
றேற்றிவான்சிவலோகத்திருப்பரால் (௭௧)

(சிவானந்தமடையும்பலன்) வேறு.

ஞானதேசிகனவிற்றியஞானயோகதனு - - *
லீநமின்றியபத்தியாலிறையைமுனனுணர்ந்த *
மோநஞானவாநந்தமாமூதுயிரடைந்தோ - *
ரூநமாமலக்குரம்பையின்மீண்டிவணுதியார் (௭௨)

(சிவபெருமானுக்காகவாவிகூபதடாகம்வகுக்கும்பலன்)

வாவிகூபதடாகங்கள்வகுத்துமேற்றணக்கோர் - *
கோவிலாதபேர்க்குரிசிலைக்குறித்தவைகொடுத்தோர்
தாவில்சீர்ப்பெருந்தநத்தொடுந்தரணிமேற்றழைத்தே
சேவினோங்கியதேவினையடைவரந்தியத்தே (௭௩)

(பார்வதியாளைஅருச்சிக்கும்பலன்)

இலயதத்துவத்திலயியோடிலயமுற்றிலங்கித் - *
தொலைவில்பேருயிர்க்கருவியாய்த்துரியமேனிறைந்த *
தலைவியெம்பெருமாட்டியைத்தாழ்ந்துநான்முறையே
நிலையினின்றருச்சித்துளோர்நிறைசிவத்துறைவார் (௭௪)

{ குருலிங்கசங்கமத்துக்கெய்துமிடையூறகலும் பொருட்டுஉயிர்விடுவோரடையும் பலன். }

குருவிலிங்கசங்கமத்தினைக்குறித்தவற்றிடையூ - *
றொருவுதற்பொருட்டாற்றமதுயிர்விடுமுரவோர் - *
மருவிடும்பலமெமக்குமேவளம்படவகுப்பா - *
னருமையென்றனனனைத்தையுமுணர்த்துபேரறிவோன் (௭௫)

(இதுவுமது.)

குருத்தபத்தியுமிருவிதநான்முறைகுறிக்கின் - - *
வருத்தமற்றநற்சுபாவமுங்கவடுமாய்வழங்குந் - *
தெரித்தமுன்னையதிகபரத்தினிற்சுகஞ்சேரப் - *
பொருத்துமற்றதுபரத்தினிற்சுகத்தினைப்புணர்க்கும் (௭௬)

{ சிவலிங்கமிருக்குமிடமுதல்நூற்றைம்பது முழ அளவுக்குட்பட்டபூமியிலிறந்தவர்களடையும்பலன். }

துன்றுசீர்ச்சிவலிங்கமுன்றொடுத்துநீள்கரங்க - *
ளொன்றுநூற்றைம்பதுமுழமுற்றநாற்றிசையு *

மென்றுமேற்சிவலோகமேயிவற்றுயிர்துறந்தோர் *
சென்றுசேர்வர்சாமீப்பியமென்பதுதிடனே, (௭௮)

(புறச்சமயத்தாலடையும்பலன்.)

பாட்டமேபிரபாகரம்பௌத்தம்வேதாந்த - - *
நாட்டுசாங்கியமால்வைணவமுநற்பசுநா - - - *
நீட்டுதன்னகப்பொருளினைத்தெளிந்துளோர்க்கின்பங்
கூட்டுமேயிருஞ்சுவர்க்கத்தினென்றுநூல்கூறும். (௭௯)

(ஆகமத்தின்பலன்.)

ஆதியைந்தொழிலாற்றிடாதாற்றுவோனணுவின் - *
போதகாரியமறைத்தவாணவத்தினைப்போக்க - *
வோதுமாகமந்தன்னையுற்றுணர்ந்துளோர்தமக்கே *
கோதில்புத்தியுமுத்தியுங்கொடுத்திடுமாதோ. (௮௰)

(இதுவுமது.)

கற்றதேசிகனருளினாற்சித்தியாகமத்தைப் - *
பற்றினுள்ளமுயற்சியாற்பணிவொடும்பயின்றோர்
பெற்றதோரிந்தப்பிறப்பினிற்பெருமலநீங்கிச் *
சிற்றுயிர்க்குயிராகியசிவத்தினொன்றுவார் (௮௧)

{ இலமானசிவாலயம் - மடாலயம் - சிவலிங்கம் - புட்கரணி
முன்போலாகச்செய்விப்பவர்களடையும் பலன். }

(வேறு.)

மாதவர்மடங்களாதிவரதன்மந்திரங்களாதி - - - *
நாதமாமிலிங்கமாதிநளிநபுட்கரணியாதி - - - *
சேதமுற்றிடின்முன்போலச்செய்கின்றோர்க்குறும்பலந்தா
னேதுமுன்செய்தோர்தம்மிலாயிரங்குணிதமோங்கும்(௮௨)

{ மேற்சொன்னவற்றிற்பழுதானவிடங்களைப்
பழுதறச்செய்விப்பவர்களடையும் பலன். }

உரைத்திடுமடங்களாதியுறுப்பினிற்சிதையினாலிற் - - - *
றேரித்திடுமுறையேநன்றாய்த்தெளிவுறச்செய்கின்றோர்க்கு - *
வரைத்திடின்முன்னஞ்செய்தோர்மருவிடும்பலத்தின்மேலாய் *
விரித்திடும்பலமுநூறுமடங்கெனவியம்புமாதோ. - - (௮௩)

(சிவயோகியின்பெருமை.) [தோன்

முந்நூற்சடங்குமுடியாதோன்முடித்தோன்வேதமுழுதுணர்ந்
றன்னோர்வந்திகோத்திரியெச்சாவான்சத்திரயாகி - - *
யிந்நூற்புகழ்வேதாந்தியிவரிசைத்தமுறையாயிரமதிகர் [௮௪)
தொன்னூல்வேதச்சிரப்பொருண்முத்துரியமகவாக்கியமதனின்.

(இதுவுமது.)

மதித்ததத்துவம்சியந்நுவயவாக்கியத்தின்வாய்மையினை - - *
விதித்தவிஞ்சையார்கோடிமறையோர்மேலாம்பசுபதிமுன் [ருட்]
கதித்தவோசைச்சிவாகமத்தின்கருதும்பொருண்மூன்றுணர்ந்துயி]
பதித்தபரமசிவனருளும்பார்க்குஞ்சிவயோகிக்கிணையோ. (அரு)

(ஆசாரியற்குஅந்நம்அளிப்போரடையும்பலன்.)வேறு.

வெதநன்குணர்விப்பிரர்கோடிபேர்க் - - *
காதிநான்முறையாலருத்தும்பல - - - *
மோதுமோர்குரவற்குறமோதனங் - - *
காதலாலருத்தும்பலங்காட்டுமால் - - (அசு)

(சிவயோகிக்குஅந்நமளிப்போரடையும்பலன்)

மறைவலோரிலக்கம்பெயர்மாந்தவே - - *
நிறையினுலருத்தும்பலநேருமா - - - *
லுறையுஞ்சாதகயோகியொருவனுக் - - - *
கறையுநான்முறையந்நமருத்தவே - - (அஎ)

(சற்புத்திரமார்க்கத்தார்க்குஅந்நமளிப்போரடையும்பலன்)

ஓதுநான்மறையோரயுதம்பெயர்க் - - *
கீதலால்வரும்புண்ணியமெய்துமாற் - - *
பூதநாதன்பதம்பணிபுத்திர - - - *
ரோதமில்லொருவர்க்கமுதீதலே - - (அஅ)

(சமயதீட்சைபெற்றவற்குஅந்நமளிப்போரடையும்பலன்)

ஆற்றும்வேதியசாயிரம்பேர்தமக் - - - *
கேற்றமோடநமீபலம்யாவையுஞ் - - - *
சாற்றுமோர்சமயிக்குத்தகுதியாற் - - *
போற்றிவீசிடும்புண்ணியநல்குமால் - (அகூ)

(சிவநாமகீர்த்தநஞ்செய்வோர்க்குஅந்நமளிப்போரடையும்பலன்)

நூறுவேதியர்க்கீபலநொய்தென - - - *
வீறியோங்கிவிளங்குதன்மெய்ம்மையே - *
யேறுயர்த்தருளெம்பெருமான்புகழ் - - *
கூறும்பத்தருக்கந்நங்கொடுத்தலே. - (கூ0)

{ சாமரம் - தண்டுலம் - தீபம் - வஸ்திரம் - கனி - யிவை சிவபெருமானுக்கும் ஆசாரியற்குங் கொடுக்கும்பலன் }

போற்றுசாமரந்தண்டுலம்பூவொளிக் - - *
காற்றுதீபங்கலைகனியாதிய - - - - *
வேத்தியீசற்குமின்குரவற்குமே - - - *
சாற்றியீந்தவர்தாமுறுபுண்ணியம் - - (கூக)

(முற்கூறியசெய்யுளுமிச்செய்யுளுமொருதொடர்)
ஓதுரோமநற்றண்டுலமோர்மல - - - *
ராதியாகியவவ்வவற்றின்றொகைக் - - *
கேதமில்லுகமாயிரமின்பொடும் - - *
பூதநாதன்புரத்திற்பொலிவரால் - - (கஉ)

(ஊத்தியாநவநம்மைப்போரடையும்பலன்)
உத்தியாநமிறைக்களித்தோரதிற் - - - *
பத்திரம்மலர்பைங்கனியின்வரை - - *
யொத்தசீருகமொன்றிமகிழ்வொடு - - *
நித்தனேங்குபுரத்திலுவார் - - (கங)

(சடைமுடிபரிக்குஞ்சிவபத்தர் அடையும்பலன்)
பத்தர்நூன்முறைவேணிபரித்திடி - - *
லொத்தவற்றுறுவேணியொவ்வொன்றிற்கு - *
மெத்துமச்சுவமேதபலத்தினைச் - - *
சத்தியம்மவர்நாடொறுஞ்சார்தலே - (கச)

(முண்டிதம் - சிகை - உடையசிவபத்தர் அடையும்பலன்)
அண்டவாணனுக்கன்பொடுமுண்டிதங் - - *
கொண்டநீள்சிகையாயினுங்கொண்டுளோர் - *
பண்டருந்நரமேதபலத்தினை - - - *
ரொண்டிகழ்ந்ததிநந்தொறுமெய்துவார் (கரு)

(சிவபத்தருக்குச்சிவலிங்கங்கொடுப்போரடையும்பலன்.)
ஈசனன்பர்க்கிலிங்கமளிக்கிலத் - - - *
தேசுவேதித்திலத்தொகைக்காயிரம் - - *
பேசுதிவ்வியகற்பம்பிரானுறை - - - *
வாசமார்சிவலோகமருவுவார் - - (கசு)

{சிவாலயத்திலும்ஆசாரியாரிருக்குமிடத்திலு மொருநாள்திருவலகிடுவோரடையும்பலன் }
அண்ணறன்பொருட்டாசிரியன்பொருட் - *
டெண்ணியேயலகிட்டுழியோர்திநங் - - *
கண்ணின்மேவருசெந்துக்கழியினு - - - *
நண்ணுவார்சாந்திராயநநற்பலம் - (கஎ)

(ஒருபட்சந்திருவலகிடுவோரடையும்பலன்)
மிக்கவிந்தவிதியிடையின்றியே - - - *
பக்கமொன்றலகிட்டவர்பல்வரநீ - - *
தொக்கருத்திரலோகந்தொகுவாற் - - *
றுக்கதிவ்வியகோடிசதயுகம். - - (கஅ)

(சிவபெருமானுக்காகநீராஞ்சநமேந்துவோரடையும்பலன்)

அண்ணலுக்கபிடேகமதாதியி - - - *
லெண்ணன்மிக்கநீராஞ்சநமேந்தினோர் - *
விண்ணருக்கரோர்கோடியர்மெய்யராய்ப் - *
பண்ணின்மிக்கபரன்பதியற்றுவார் - - (௯௯)

(தயிரபிஷேகபலன்)

வண்டுகிண்டிதழித்தொடைவார்சடை - - *
யண்டநாயகற்கன்பொடுவெண்டயிர் - - *
தொண்டினோடுந்தொழுதுவந்தாட்டினோர் - *
விண்டுவின்பதிமேவுவர்மெய்ம்மையே - (௱)

(பசுவினெய்யபிஷேகபலன்)

ஆயகற்பமோராயிரகோடியு - - - *
மோய்வதின்றியுஞற்றியபாவங்க - - *
டேயுநற்சிவலிங்கத்திற்சீர்பெறத் - - *
தூயநெய்முழுதலாட்டிடுந்தூயர்க்கே - (௱௧)

(தேன்அபிஷேகம் - ஞாநாக்கிநியிற்பூசை - செய்யும்பலன்)

தேனுவந்துசிவலிங்கத்தாட்டினோ - - *
ரூனுவந்துபல்பாவமொழிப்பரான் - - *
ஞாநவங்கியிற்பூசைநயந்திடின் - - - *
மாநவங்கிபதத்தினில்வாழ்வரோ - - (௱௨)

(கருப்புரசஅபிஷேகபலன்)

இக்கினூறுமிரதமினிமையாற் - - - *
செக்கர்மேனிச்சிவலிங்கத்தாட்டினோர் - *
தக்கனூற்றுமகந்தடிந்தெம்மையாண் - - *
மிக்கவீரதரன்பதிமேவுவார் - - - (௱௩)

(எண்ணெய் - இளநீர் - அபிஷேகபலன்)

சங்கரற்கெட்டயிலமெய்ச்சாத்திடிற் - - *
பொங்குவாயுவின்பொன்னகர்சேர்குவார் - *
துங்கநீர்க்கனியாட்டிற்றுரிசுபோய்த் - - *
தங்குவார்பிதிர்தங்கியதாநமே - - (௱௪)

(விபூதிஅபிஷேகபலன்)

வேதநீற்றைவிமலனுக்காட்டினோ - - - *
ரோதுமச்சிவன்போன்றங்கொழிவின்றி - - *
மூதெயிற்சிவலோகமுதற்பதி - - - - *
போதமுற்றவர்போற்றப்பொலிவரோ - (௱௫)

{ சிவபெருமானுக்கும்ஆசாரியருக்கும் பொ
ன்னுமணியுங்கொடுப்போரடையும் பலன். }

நம்பனுக்குநற்றேசிகற்கும்பகஞ் - ※
செம்பொனோர் துடிமாத்திரஞ்செய்தவ ※
ரும்பர்கோன்பதியொன்றுவர்மாமணி ※
யிம்பர்விசினயன்பதமெய்துவார் (௱௬)

(சிவபெருமானுக்குத் தூபமிடுவோரடையும்பலன்)

தேவதாருவுமேருவுஞ்சீர்மிக - - ※
மேவுகுந்துருவும்வில்வமாதிய - - ※
தாவினற்கனிநெய்யொடுதங்கிய - ※
தூவமிட்டவரச்சுதனுவமோ - - (௱எ)

(இதுவுமது)

விதியிவற்றினற்கந்தம்விரவிடி - - ※
னதிகமாறுயிரங்குணமாமிவை - - ※
புதியகுக்குலுவோடுபொருந்திடில் - ※
வதியுமாறுயிரங்குணம்வாய்க்கவே. (௱அ)

(இதுவுமது)

அன்னவைகிருதத்துறினுயிரந் - - ※
துன்னுமிக்குணத்தின்மயிடாக்கியென் - ※
றுன்னுநற்பொருள்கூடினுருத்திரன் - ※
றன்னையொத்தபலன்றருந்தன்மையார். (௱௯)

(இதுவுமது)

காரின்மிக்கபொதியத்திற்காரகிற் - - ※
சீரின்மிக்கவித்தூபஞ்செறித்திடிற் - - ※
பாரின்மிக்குப்பயின்றபல்பாவமும் - ※
வேரினற்றுவிளிந்திடன்மெய்ம்மையே. (௱௰)

{ சிவலிங்கப்பெருமானுக்குப்பச்சைக்கரு
ப்பூரக்கல்வைசாத்துவோரடையும்பலன் }

சுகந்தகந்தஞ்சுலவியவேலபந • - - ※
முகந்தலிங்கத்தொருதிநஞ்சாத்தினோ - ※
ரிகந்துபாவமிமையவர்கோடியாண் - ※
டகந்தெளிந்தங்கரன்பதிநண்ணுவார். (௱௰௧)

{ சிவபெருமானுக்காகப்பேரிமுதலியவா
த்தியங்கள்கொடுப்போரடையும் பலன் }

பொங்குபேரிபொருமுரசம்மிரு - - ※
தங்கமோடுதிமில்படகாதியுஞ் - - ※

சங்குதாளந்தனுமிகுகாளம் - - *
விங்குசீரொலிவேணுவும்வீணையும். (௱௰உ)
(முற்செய்யுளு மிச்செய்யுளு மொருதொடர்)
சொன்னவின்னவைசோதிநிலாவணி - *
மன்னவற்குவழங்கியமாதவ - - - *
ரன்னவன்றனையொத்தயுதந்தருந் - - *
துன்னுகற்பமவன்பதிதோய்வரால். (௱௰௩)
{சிவாலயத்திலுஞ்சிவனடியார்கள்மடாலயத்திலும்நவமணிமாலிகையாற்பத்திசெய்தவரடையும் பலன்.}
நித்திலம்முதனீண்மணிமாலிகை - - -
யத்தனாலயத்தன்பர்மடத்தினும் - - *
பத்திசெய்தவர்பற்பலலோகமு - - *
மத்தர்போனெடுங்காலமமர்வரால். (௱௰௪)
{சிவபெருமான்சந்நிதியில்துதிசெய்வோருங்கீதம்பாடுவோருமடையும் பலன்.}
துதியுங்கீதமுஞ்சோதிமுன்பத்தியாற் - *
கெதியினோதிடக்கேட்டவர்தாபர - - *
மதியில்கீடங்கிருமிவரன்பதி - - - *
வதியுமோதினர்க்கென்கொல்வகுப்பதே. (௱௰௫)
(வில்வக்குழம்புசிவபெருமானுக்குஅபிஷேகஞ்செய்யும்பலன்)
மாசில்கூவிளபத்திரமத்தநந் - - - *
தேசுலாம்பீடலிங்கமதிற்செயி - - *
னேசைநான்மறையோர்க்கயுதம்பசு - *
பேசியீந்தபெரும்பயன்பெற்றுளார். (௱௰௬)
(சிவபெருமான்சந்நிதியில்யாவர்நடநஞ்செய்யினுமடையும்பலன்)
திருத்தமெற்றைமுன்யாவர்நிகழ்த்தினும் *
விரித்தபானுவயுதம்விரிகதிர் - - - *
பொருத்துதேரிற்புலவரரம்பையர் - *
கருத்திறைடகங்காண்பர்சிவபுரி. - (௱௰௭)
(சிவாகமதானஞ்செய்வோரடையும்பலன்)
நிறைந்தவாகமதானநிகழ்த்திடி - - *
லறிந்துமற்றறியாமையோடாயினுஞ் - *
சிறந்தபாலன்முதற்கொலைதீர்ந்துதே - *
ருறைந்துநற்சிவலோகம்புகுவரே. (௱௰அ)

(சிவனடியாருக்குஆசநங்கொடுப்போரடையும்பலன்)

முண்டகக்கண்முராரியும்போற்றிடு - *
மண்டர்கோனன்பர்க்காசநமீந்துளோ - *
ரெண்டிகழ்ந்தவிருபதினாயிரங் - - *
கொண்டவாண்டுமேறியதங்கூடுவார். (௱௰௯)

(சிவனடியா ரைத்தரிசிப்போ ரடையும்பலன்)

கங்கைவேணியன்றொண்டரைக்காணுறிற் *
றங்கையாடும்பலன்றருங்காரொழு - *
தங்கைநீரினவர்தாள்விளக்கினோ - - *
ரங்கிசேர்பதிதங்குவரைந்துகம். (௱௨௰)

(சிவனடியாருக்குமுகவாசங்கொடுப்போரடையும்பலன்)

கானமார்முகவாசங்கனிவொடு - - - *
ஊநமில்சிவபத்தர்க்குதவினோ - - - *
ரானகோடியுகமாயிரந்தழீஇ - - - *
ஞானவேற்குமரன்பதிநண்ணுவார். (௱௨௧)

(சிவனடியாருக்குஆசமநம்அருக்கியங்கொடுப்போரடையும்பலன்

அன்பருக்காசமநமருக்கிய - - - *
மின்பருக்காதியல்வழியீந்துளோர் - *
துன்பருக்கிநிலத்திற்றுலங்கியே - - *
பின்பருக்கன்பெரும்பதிநண்ணுவார். (௱௨௨)

(சிவபெருமானுக்குக்கருப்பூரதீபங்கொடுப்போரடையும்பலன்)

பொற்புறச்சிவபுண்ணியமேவிடக் - *
கர்ப்புரச்சுடர்த்தீபமளித்துளோர் - *
தற்பரச்சிவசாமரதந்தருஞ் - - - *
சிற்பரச்சிவஞானந்தெளிகுவார். - (௱௨௩)

(சிவனடியாருக்குவிசிறிகொடுப்போரடையும்பலன்)

கீற்றுவெண்மதியோன்றொண்டர்க்கின்புறச்
சாற்றித்தாலவிருந்தந்தழீஇயதோர் - *
காற்றினாலவர்காயத்தின்வேர்வினை - *
மாற்றுவார்வாயுவின்புரமன்னுவார். (௱௨௪)

(சிவனடியாரைஸ்நாநஞ்செய்விப்போரடையும்பலன்)

முத்தன்வேதமுதல்வன்சிவனவன் - *
பத்தர்பாதம்பணிந்தவர்க்கன்பினாற் - *
சுத்தநாநஞ்செய்வித்திடுந்தூயவர் - *
புத்தியாற்செய்தபாவங்கள்பொன்றுமே. (௱௨௫)

(சிவனடியாருக்குக்கோவணங்கொடுப்போரடையும்பலன்)

நாற்றமாமலரோனெழினாரணன் - - *
போற்றுசங்கரனன்பர்க்குப்பொங்கிழை *
யாற்றுகோவணமீந்தவராயிரந் - - *
தேற்றுகோடியுகஞ்சிவலோகரே. (௱௨௬)

(சிவனடியார்க்குக்கம்பளங்கொடுப்போரடையும்பலன்)

நீடுநற்சிவபத்தர்க்குநேசத்தான் - - *
மூடுகம்பளமீந்திடின்முன்னதி - - *
னாடுரோமமோரொன்றினுக்கோர்கழஞ் *
சாடகந்தருமப்பலநேருமால் - (௱௨௭)

{சிவனடியாருக்குப்புலித்தோல்மான்றோல்கொடுப்போரடையும் பலன்}

வழுவையின்னுரிவானவனன்பருக் - - *
குழுவையின்னுரியாதியுதவினோர் - - *
தழுவுகம்பளத்திற்குமுன்சாற்றிய - - *
விழுமிதாயபலத்தினைமேவுவார் - (௱௨௮)

(சிவனடியாருக்குஅந்நம்ஊட்டுவோரடையும்பலன்)

கூற்றைவென்றகுழகனடியரைப் - - *
போற்றியந்நம்பொலிவுறவூட்டினோ - *
ராற்றுமோர்கற்பமாயிரகோடிமேல் - *
வீற்றிருப்பருருத்திரன்மெய்ப்பதி (௱௨௯)

மூதெயிற்சிவலோகன்முதற்பதி - - *
யோதுகாலமநேகமுவப்புறீஇ - - *
யேதமில்சிவன்போன்றங்கிசைந்தபின் *
னீதிமன்னவராகிநிலத்தராய் - (௱௩௰)

(முன்னிரண்டுசெய்யுளுமிச்செய்யுளுமொருதொடர்)

சிந்திமூலதிமிரமிருவினை - - - *
பந்தம்வீடேன்பதுமூலபாசமு - - *
மெந்தைபாதத்திணங்குவரோகமா - *
யந்தமில்குரவன்றிருவாணையால் - (௱௩௧)

(சிவனடியாருக்குப்பிதுர்திநங்களில்அந்நங்கொடுப்போரடையு[ம்பலன்]

தென்புலத்தவர்நாளிற்றிருவமு - - *
தன்பினிற்சிவபத்தர்க்கருத்திடற் - - *
றுன்பகன்றுபிதிர்க்கள்சுகந்தழீஇ - *
யின்பினிற்சிவலோகத்திருப்பரோ (௱௩௨)

(சிவனடியாருக்குவாசநீர்கொடுப்போரடையும்பலன்)

ஓதுபாடலமுற்பலமாதிய - - - *
சீதமார்சுகந்தந்தருந்தீம்புனன் - - *
மாதவர்க்குவணங்கிவழங்கினோ - - *
ரோதமில்வருணன்பதமெய்துவார் (௱௩௩)

(சிவனடியாருக்குக்கரகங்கொடுப்போரடையும்பலன்)

பரகதித்துணையன்பர்பரித்திடக் - - *
கரகமாதிகரத்தில்வழங்கினோர் - - *
திருவினுக்கிறைபோற்றிடத்திவ்விய - *
வருடகோடிவரத்தொடுமன்னுவார் (௱௩௪)

(சிவனடியாருக்குச்சுக்குமுதலியகொடுப்போரடையும்பலன்)

சொற்பயன்றருசுக்குமுற்பத்திய - - *
நற்பயன்றருபத்தர்க்குநல்கினோ - - *
ரற்பகைக்கதிராதபன்போற்றவே - - *
கற்பமாயிரங்கோடியுங்காண்பரே (௱௩௫)

{ சிவனடியாருக்கெய்தும் வியாதிக்காக
மருந்துகொடுப்போரடையும் பலன். }

பெருந்தவர்க்குப்பிணிமருந்தாதியால் *
வருந்திமாற்றிமகிழ்ச்சிசெய்தோருக - *
நிரந்தகோடிநூறெய்துநிலையராய்த் - *
திருந்திமேற்சிவலோகந்திளைப்பரே (௱௩௬)

(சிவனடியாருக்குவிபூதிப்பொட்டகங்கொடுப்போரடையும்பலன்)

நீதிவெண்டிருநீறுநிறைத்துநற் - - *
பூதியாலயம்புண்ணியர்க்கீந்துளோர் - *
சீததீர்த்தங்கள்செய்பலனெய்தியே - *
போதமார்சிவலோகம்புகுவரே (௱௩௭)

(சிவனடியாருக்குஆகமங்கொடுப்போரடையும்பலன்) வேறு.

ஒளியாரோசைச்சிவாகமத்தையுண்மைச்சிவஞானிக்களித்தோர் - *
தெளிவாமியல்பிற்றுநவிதஞ்சேரவழங்குந்திறத்தினராய் - - *
விளியாவரன்போனெடுங்காலம்விருப்புற்றிருப்பர்படிப்போர்கட்
களியாநிற்போர்க்ககமகிழவளிக்கும்பலமேலறைவாமே. (௱௩௮)

{ படிப்போருக்குஆகமங்கொடுப்போரும்பதிபசு
பாசத்தினுண்மையறிவோரும்அடையும் பலன். }

அன்னோர்கோடிகோடிதருமதிகமானபுண்ணியத்தை - - *
முன்னோனியலின்மொழிந்தபடிமுற்றுமடைதல்சத்தியமா - *

லின்ஞேன்மையுறுஞ்சிவஞாநவியலினியன்முப்பொருடெரிந் தே
பின்ஞேகையுடன்பெறும்பலன்முன்பேசற்கரியபெருமையதால்.

வேறு. (௱௩௯)

(சிவனடியாருக்குருத்திராட்சங்கொடுப்போரடையும்பலன்).

செக்கர்மேனிச்சிவனடியார்க்கணி - *
யக்கமாலிகையன்புடனல்கிஞேர் - *
நக்கஞர்பதநண்ணுவர்நண்ணியே - *
மிக்கருத்திரலோகம்விரவுவார். - (௱௪0)

(சிவனடியாருக்குக்குடைகொடுப்போரடையும்பலன்)

துண்டவெண்பிறைவேணியன்றொண்டர்க்குத்
தண்டிஞேடுயர்சத்திரமீந்தவர் - - *
கொண்டதங்குலமாதொடும்வேந்தராய் *
மண்டனிற்சதயோசனைமன்னுவார். (௱௪௧)

(சிவனடியாருக்குப்பாதுகைகொடுப்போரடையும்பலன்)

நீங்கலாதுநிறைசிவநேசர்பாற் - - *
பாங்கிஞலணிபாதுகையீந்துளோ - - *
ரோங்குதேர்முதல்வாகநமூர்ந்துபோய்த் *
தீங்கிலாதசிவபுரஞ்சேர்வரால். - (௱௪௨)

(சிவஞாநதேசிகருபதேசகிரமமில்லாமற்சிவபுண்ணியஞ்செய்யி
புங்கமாஞ்சிவபுண்ணியந்தேசிகர் - * ற்பலனில்லை}
தங்கள்வாக்குபதேசமதன்றியே - - *
யிங்கியற்றினிரும்பயனில்லையாய் - - *
மங்குமென்னும்வரன்புகலாகமம். (௱௪௩)

(உத்தமமத்திமஅதமதேசிகர்) வேறு.

ஆகமத்திலிருபத்தையாயிரநற்சுலோக *
மறிந்ததேசிகன்கநிட்டனம்பதிஞயிரந்தான் *
மோகமறவாராய்ந்ததேசிகன்மத்திமனே *
முறைமையிஞலோரிலக்கமுயன்றவனுத்தமனே *
யேகனமலேசனருள்காமிகமுன்ஞக *
வியம்பியிடுமிருபத்தெட்டாகமத்துமிஃதே *
பாகமிகுசாரார்ச்சாரம்மெனவோரியலைப் *
படித்துணர்ந்தோனியல்களெல்லாம்படித்துணர்பண்டித னே.

முற்றிற்று. [௱௪௪)

